NOVEMBER/DECEMBER 2024

# CTA63/BTA63 — திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்

Time : Three hours Maximum : 75 marks




பகுதி அ — ($10 \times 2 = 20$ மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

1. திராவிட மொழிகள் எத்தனைப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது?

2. தமிழ் நாட்டில் மிகப்பழமையான கல்வெட்டுகள் எந்த எழுத்தில் எழுதப்பட்டிருந்தன?

3. தமிழ் ஒலிப்பு முறைப் பற்றி விரிவாகக் கூறும் தமிழ் இலக்கண நூல் எது?

4. ஒலியியல் எத்தனை வகைப்படும்?

5. ஏழு என்பதன் மாற்றுருபுகளை எழுதுக.

6. மொழி மாற்றம் என்றால் என்ன?

7. ஒலியுறுப்புகளை எடுத்துரைக்க.

8. 'ஒலியியல்' பொருள் தருக.

9. பெயர் சொல்லின் வகைகளைக் கூறுக.

10. உயர்திணை பலர்பால் விகுதிகள் குறித்து எழுதுக.

பகுதி ஆ — (5 × 5 = 25 மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

11. (அ) திராவிட மொழிகளின் வகைகளைக் கூறுக.

(அல்லது)

(ஆ) 'கல்வெட்டுத் தமிழ்' குறித்து சுருக்கி எழுதுக.

12. (அ) தொல்காப்பியம் குறிப்பிடும் மெய்யொலிகள் குறித்தெழுதுக.

(அல்லது)

(ஆ) உறழ்ச்சி என்றால் என்ன? சான்று தருக.

13. (அ) 'மொழி மாற்றம்' சான்றுடன் விளக்குக.

(அல்லது)

(ஆ) ஒப்பியல் அணுகு முறை குறித்து எழுதுக.

14. (அ) ஒரு மொழித் திரிபுகள் குறித்து விளக்குக.

(அல்லது)

(ஆ) திராவிட மொழிகளில் ஒலிநிலை மரபு குறித்து எடுத்துரைக்க.

15. (அ) அடிச் சொல்லோடு ஆக்க உருபு சேரல் குறித்து விளக்குக.

(அல்லது)

(ஆ) 'தெரிநிலை வினை குறிப்பு வினை' - குறிப்பு வரைக.



பகுதி இ — (3 × 10 = 30 மதிப்பெண்கள்)

எவையேனும் மூன்று வினாக்களுக்கு விடையளிக்க.

16. திராவிட மொழிகள் குறித்தும் திராவிட மொழியில் அமைந்த கல்வெட்டுகள் குறித்தும் கட்டுரை வரைக.

17. திராவிட மொழி இலக்கணங்களின் தனிச்சிறப்பினை விவரி.

18. திராவிட மொழிகளில் ஒப்பிலக்கண ஆய்வின் நோக்கமும் பயனும் குறித்துக் கட்டுரைக்க.

19. திராவிட மொழியியல் ஆய்வுகள் குறித்து ஆராய்க.

20. திராவிட மொழிகளில் எண்ணுப்பெயர்கள் குறித்து விளக்குக.

---